உ

கடவுள் துணை.

# காரைக்காலம்மை சரிதை.




பு. க. ஸ்ரீநிவாஸாசாரியர்,

(தமிழ்ப் பிரதம பண்டிதர், வூரீஸ் காலேஜ், வேலூர்.)


எழுதியது.




வேலூர் :

ரிகார்ட் அச்சுக்கூடம்.

1917

ஜனோபகாரி ஆபீஸ், வேலூர்.




[விலை அணா ஒன்று.

# முகவுரை.

சிவனடியாராகிய அறுபத்துமூன்று நாயன்மார்களில் காரைக்காலம்மை என்பவர் ஒருவர். இவரது இயற்பெயர் புனிதவதியார்; வைசியசாதியைச் சேர்ந்தவர்; கல்வியறிவொழுக்கங்களுடன் மிக்க சிவபக்தியும் வாய்ந்த ஸ்திரீரத்தினம்; சிவபிரானால் 'அம்மையே!' என்று அழைக்கப்பெற்றவரென்றால், இவரது பெருமையைக்குறித்துச் சொல்வதேன்? இவர் பாடியருளிய பிரபந்தங்கள் பதினோராந்திருமுறையில் இரண்டாம் வரிசையிற் சேர்ந்துள்ளன. இவர் இயற்றியருளிய பிரபந்தங்கள்:— 1. திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகங்கள் இரண்டு, 2. திருவிரட்டைமணிமாலை, 3. அற்புதத்திருவந்தாதி என்பன.

இவர், சிவனடியாரை வழிபட்டு முத்திபெற்ற நாயன்மார் பத்தொன்பதின்மரில் ஒருவர். இச்சரித்திரத்தினால், நம் தமிழ்நாட்டில் கல்வியறிவொழுக்கமும், ஈச்வரபக்தியும், கவிபாடுந்திறமுமுடைய பெண்மக்கள் இருந்தனரென அறியக்கிடக்கின்றது.

இவரது சரித்திரம், சிறப்பாகச் சேக்கிழார்நாயனார் செய்யுளாக இயற்றிய திருத்தொண்டர் பெரியபுராணத்தில் இனிதாக உள்ளது; அனைவரும் இனிது

அறிந்துகொள்ளக்கூடுமென்றநோக்கங்கொண்டு, அஃது ஆங்குள்ளவாறே வசனநடையில் எழுதப்பட்டது. இந் நூலைப்படித்தால் பெண்பாலாரெல்லாரும் கற்பொழுக்கத்தையும் கடவுட்பக்தியையும் பெறுவரென்பது திண்ணம். சிறுவர் சிறுமியரனைவருமே இதனைப் படிப்பதனால் நலம்பெறுவரென்னும் நோக்கத்துடனே இது வெளியிடப்பட்டது.

இச்சரித்திரம், சென்ற 1916-ம் வருடம் டிஸம்பர் மாதத்தில் வேலூர் "ஜனோபகாரி" பத்திரிகையில் வெளிவந்தது. அதனைப் புத்தகரூபமாக இப்பொழுது மேடி "ஜனோபகாரி" ஆபீஸார் வெளியிட்டனர்.

தமிழ்நாட்டினரது நன்மைக்கென்றே பத்திரிகையையும் நூல்களையும் வெளியிடும் அவர்க்கு நன்றியறிவுடன் வந்தனஞ்செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

வேலூர்:
1917ளு ஜனுவரிமீ 20௳ } பு. க. ஸ்ரீ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முன்னுரைப் பாயிரம்.

---

"பாயிர மில்லது பனுவ லன்றே" என்னும் நூற் பாவுக்கிணங்க இந்நூற்கோர் பாயிரம் உரைக்கும் பொறுப்பு என்மேற் சார்பலாயிற்று. "காதலித் தறஞ் செய்வோர்க்குக் கவசமும் கண்ணுமாகி, எதிலர்க் கிடும் பையாகி இறைஞ்சினர்க் கின்பமாகி, ஆதுலர்க் கன்னை யாகி, அரனடிக் கன்புமிக்கார், பூதலத் திறைவ னூனை பொதுவற நடாத்திப் பொன்றுப், புக"ழ்னைப் பெற் றுள்ள ஸ்ரீதத்தனுர்க்கு அருமகவாய்த் தோன்றி, சற்பு நெறிவழாது பொற்புற இல்லறமியற்றி, அரனடி யார்க்கு ஞானவமுதுடன் நயந்தமுதுநுகர்வித்து அர னடியகலாவாறு அருள்பெற்று ஆலங்காட்டினில் அம லனடியில் அமர்ந்து இனிதுவீற்றிருக்கும் புனிதவதி யார் என்னும் புண்ணியவதியாம் காரைக்காலம்மை யாரின் சரிதையை ஆசிரியர் இனிது விளக்கித் தெள் ளிய தமிழில் உரைநடையாய் எழுதியுள்ளார்.

சொய்தமலர் பணபற்றிருக்கலாம் ; சமைத்த வஸ்து சாரமற்றிருக்கலாம் ; வர்ணித்த சித்திரம் அழகற்று மிருக்கலாம் ; ஆனல், 'வல்லவர் கையில் புல்லும் ஆயு தம்' என்பது வாய்மை. இயற்கையிலேயே பக்தியினை

விளைவிக்கும் மாண்பினைப் பெற்ற அணங்காம் காரைக்கால் அம்மையின் சரிதையைப் படிக்குந்தோறும் மேன்மேல் பக்தியைப் பெருக்குமாறும், உமைக்காளுக்கு இடையறுத்தொண்டு செய்யுமாறும், கற்புநெறி மாண்பைத் திகழ விளக்குமாறும், மதுரமிக்கொழுகும்படி எழுதியுள்ளது, ஆசிரியரின் கல்வித்தேர்ச்சியையும் கற்றறிதலாலாகிய ஒழுக்கத்தினையும் நன்கு பொலிவுற விளக்குகின்றது.

இந்நூலாசிரியர் வைணவமதப்பற்றுடையராயினும், பலநதிகள் பற்பலவாறு போயினும் கடையில் அவை சாகரத்தைச் சாருந்தன்மையைப்போல் இறைவன் பற்பலநாமங்களைப் பெற்றிருப்பினும் எத்தெய்வத்தைப் பற்றிய வணக்கமும் இறுதியில் அம்மாதவனையே அடைகிறதென்று கோஷிக்கும் வேதாந்த முடியை மேற்கொண்டு தக்காங்கு மதத்துவேஷமின்றி வரைந்துள்ளது போற்றத்தக்கதே. குடிசைநூலார்போக்கிலேயும் நாகரிகத்திலேயும் காலங்கழித்து இயவுள் தன்மை யடையாதவராய் வாணாளை வீணாய்ப் பாழ்படுத்தும் நம்மனோர் பலர்க்கு அறிவுச்சுடர்கொளுத்தி ஊற்றுநீர்போலத் தெய்வசிந்தை உள்ளத்தின்கண் சுரக்குமாறு எழுதியுள்ளமையால், ஆசிரியரது ஆழ்ந்த கருத்துப் புலனாகின்றது. சிலர் நூல்களின் பெயர்களைப் பகட்டாய்க் காட்டி, அரும்பொருள் உண்டென்று ஆவலுடன் கற்குங்கால் அறுதியில் அங்கொன்றும் இல்லையென்று வெறுக்கும்படி எழுதியுள்ளார்கள். அங்ஙனமின்றி, இந்நூல் சுவையுடன் உள்ளமையால், அன்பர்

கள் இத்தகைய துறையுடைய நூல்களை ஆதரித்து வருவார்களேயாயின், மலர்மிசை யேகினவனுடைய மாணடியைச் சார்ந்து நிலமிசை நீடுழிகாலம் வாழ்ந்து வருவார்களென்பது திண்ணம்! திண்ணம்!! இன்னும் இதுபோன்ற நூல்கள் வெளிவந்துலவுமாறு, ஆக்கி யோர்க்கு மேன்மேல் இறைவன் திடகாத்திரத்தையும் வற்ருச் செல்வத்தையும், ஊக்கத்தையும் கொடுத்தருள் புரிவாராக

காஞ்சீபுரம் - வாசுதேவ ஐயர்,

தமிழ்ப்பண்டிதர், ஐக்கியக் கிறிஸ்தவ சங்கத்துப்

போதனைப்பயிற்சிச் சலாசாலை,

வேலூர்.



கடவுள் துணை.

# காரைக்காலம்மை சரிதை.

நிலவளம் ஜலவளம் முதலிய பல வளங்களும் நிறைந்த அழகிய காரைக்கால் என்னும் செழுநகரமொன்று சோழமண்டலத்தில் உள்ளது. அது, பெருமைமிகுந்த தருமவழியில் நின்று சத்தியத்திற் சிறிதேனும் குறைவில்லாத சிறந்த பெரிய வைசியர்களது குலத்தால் பொலிவுபெற்று ஓங்கிய பட்டணமாகும். மரக்கலங்கள் நிறைந்த கடற்கரையிலுள்ள துறைமுகப்பட்டினமாகியகாரைக்காலில் வணிகர்குலத்திற்குத் தலைவரும், அன்பு, அருள், வாய்மை, அறிவு, ஒழுக்கம், ஈகை, சிவபக்தி முதலிய குணங்களனைத்திலும் மேம்பட்டு விளங்குபவருமாகிய தனதத்தனார் என்பவர் ஒருவர் இருந்தார். கனதனம்படைத்த அத்தனதத்தனாரது தவத்தினால், அவரிடத்தில் இலக்குமிவந்து அவதரித்தாள் என்று சொல்லும்படி, விளங்குகின்ற மிக்க அழகுபொருந்திய ஒரு பெண்மணி பிறந்தாள். அக்குழந்தைக்குத் தந்தையார் புனித

வதியென்று நாமகரணஞ்செய்தார். வர்த்தகாது பெரியகுலம் விளங்கும்படி புனிதவதியார் வந் தவதரித்தருளியபின்பு, ஆபரணங்கள் அணியப் பெற்று விளங்குகின்ற மெல்லிய பாதங்கள் தள் ளாட்டமடைந்து அசையும் நடையைப்பூண்டப குழந்தைப்பருவத்திலேயே, பரமசிவனது திரு வடிகளுக்குத் திருத்தொண்டுகளைச் செய்து பழக்கமுற்றுவருகின்ற சிறப்பைப் பொருந்து வதற்குரிய தணிதலில்லாத மிக்க பக்தியானது மனத்திற் பெருக, பொருளுணர்வதற்கு அரிய பெரிய குதலைச் சொற்களைப் பேசிவந்தார். மிக்க உயர்வுற்ற உறவினர் பலரும் உள்ளம் உவக்கும் படி, நடக்கின்ற அவ்வப்பருவங்களிற் செய்ய வேண்டிய சிறப்புமிகுந்த சுபகாரியங்களையெல் லாம், செல்வம்மிக்க தந்தையாகிய தனதத்தனர் அன்போடுசெய்தார். ஸ்திரீரத்தினமாகிய அவர், இளம்பிறைபோலவும், அழகின்கொழுந்து உரு வெடுத்து எழுந்து விளங்குவதுபோலவும், ‘நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமு’ மாக, தந்தை தாயர் சீராட்டிப் பாராட்டி வளர்க்க, ஈச்வரனிடத்தில் தங்கிய பக்தியோடு வளர்வாராயினர். அவரது அழகையும், அறிவை யும், நற்குணநற்செயல்களையும், அருமைமழலை மொழியையும் கண்டு கேட்ட பிறரும், மகிழ்ந்து அவர்பால் அன்புமிக்கு உருகுவாராயினர்.

"தம்மிற் றம்மக்க ளறிவுடைமை, மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது."

என்பது பொய்யாமொழியன்றோ?

அவர், விளையாட்டுக்களிற் பழகுகின்ற பேச்சுக்களிலெல்லாம் தேவர்பெருமானாகிய பரமசிவனது திருநாமங்களும் திருவார்த்தைகளும் பொருந்திவரப் பழகியும், தொண்டர்கள் எழுந்தருளினால் அவர்களைத் தொழுதும் வருவார். கல்வி கேள்விகளில் மேம்பட்டுக் குணம் பெருகியிருக்கும் இவர், செவிலித் தாயர்களும் தோழிகளும் வளர்க்க வளர்ந்து, திருவுருவம் பொலிவுற யௌவனகாலத்தை அடைந்தார். சாமுத்திரிகநூலில் வல்லவர்கள் நல்லவையென்று உரைக்கிற லக்ஷணங்கள் நிரம்பப்பெற்றுப் பெருகுகிற மிக்க அழகு மேன்மேலும் சிறப்புமிக்கு வருகிற பெருமையால், அகத்தினின்றும் வெளியிற் போகலாகாத பருவத்தில், இவர்களுடைய குலத்திற்கு ஏற்ற தொன்றுதொட்டுவரும் வம்சத்திற் பிறந்த வணிகர்கள், இக்கன்னிகையைக் கல்யாணம் பேசுவதற்குத் தொடங்கினார்கள். கடற்கரையிலுள்ள நிறைவளமுள்ள நாகபட்டினத்தில், நிதிகட்கு ஈசனாகிய குபேரன்போல இவ்வுலகத்தில் நிதிபதியெனப் பெயர்பெற்றுப் பெருமையுற்ற புகழோடுகூடிய வணிகர், தாம்

பெற்ற உயர்ந்த மைந்தனுக்குப் புனிதவதியை மணத்துக்குரிய மகளாகப் பேசிவருவதற்குத் தமது வளநகரிலிருந்து, மாடமாளிகை கூட கோபுரங்கள் நிரம்பிய காரைக்காலுக்குத் தூது விட்டார். தூதாக வந்த பேரறிவையுடைய வர்கள், மணத்தைச்குறித்துப் புனிதவதியாரது தந்தையாராகிய அந்தத் தனதத்தனாது மனை யிற் புகுந்து, அவரைக் கண்டு, 'நீர் தவத்தாற் பெற்ற பொற்கொடியும் மின்னற்கொடியும் போன்ற புனிதவதியை, நிதிபதி மைந்தனாகிய பரமதத்தனுக்கு, நமது தொன்றுதொட்டுவரும் குலத்தின் முறைமைக்கு ஏற்க மணம்புரிந்து கொடுப்பீராக' என்று சொன்னார்கள்.

அத்தனதத்தரும், தமது குல முறைப்படி மணம்புரிந்து கொடுக்கச் சம்மதித்து விடை கொடுக்க, அவர்கள்சென்று நாகையைச் சேர்ந் தார்கள். அவர்களது சொல்லைக்கேட்ட நிதி பதியும், மிக்க சிறப்பைப் பெற்றவர்போலக் களிப்புற்று, தம் ஒப்பற்ற சிறந்த குமாரனாகிய பரமதத்தனுக்குச் செல்வம்மிகுந்த சுற்றத்தாரு டன் களிகூர்ந்து விவாகம் நிறைவேற்றுதற்காகச் செய்யவேண்டிய தொழிலை மேற்கொண்டார். நிதிபதிமுதலியவர், இவ்வாறு தனதத்தர் மணத் தை இசைந்தனாலே, சுற்றத்தார் யாவருக்கும்

திருமணத் திருமுகம் செல்லவிட்டு, மங்கல தினம் சமீபிக்க, மணவினைகளெல்லாவற்றையும் பொருந்தச்செய்து, மலர்மாலையைச்சூடிய மகனையும் கல்யாணத்துக்கு உரிய ஆபரணங்களினால் அழகுவிளங்கச்செய்து, பெரிய முரசம் முதலிய வாத்தியங்கள்மிகுந்து ஒலிக்க, காரைக்கால்நகரத்துக்குப் போய்ச்சேர்ந்தார்கள்; அங்ஙனம் போய்ச் சேர்ந்து, ஒன்றன்மீது ஒன்றாக உபரிகைகள் அடுக்கிக் கட்டிய அழகிய தனதத்தனுடைய வீட்டிற் புகுந்து, நூல்களிற்கூறிய முறைப்படி விவாககாரியங்களைச் செய்தமைத்து, தளிர்போலும் மெல்லிய அடியையும் மெல்லிய புன்சிரிப்பையும் முத்துப்போன்ற பற்களையுமுடைய மயில்போலும் சாயலுள்ள புனிதவதியாரை, மணமாலைதரித்த பரமதத்தனுக்கு, களிப்பு மிகுந்து சுற்றத்தார் போற்றக் கல்யாணம் செய்தார்கள். மங்கலமாகிய மணவினைகளைச் செய்து முடித்து இனிதாக இருக்கும் நாளில், தனதத்தர் தங்கள் குடிக்குப் பெறுதற்கரிய ஒரேபெண்ணாதலால், அவள் நாகபட்டினத்திற்குச் செல்லாமல் கணவராகிய பரமதத்தருடன் அங்குப் பொருந்தி இனிதாக இருக்கும்படி தமது மனைக்குப் பக்கத்தில் அழகிய மாடமாளிகையைக் கட்டினார். தனதத்தர் தம் மகளைக்கொடுக்கும்போது அளவற்றதிரவியத்தைச்

சீதனமாகக் கொடுத்தனனல், நிதிபதியின் புத்திரராகிய பரமதத்தரும், மிக்க ஆசையோடு, தாம் தங்கும் மனையைச் செல்வத்தாற் பெருகச்செய்து, சீதனமாகக்கிடைத்த பொருளை விருத்திசெய்வதில் முயற்சியுறுதலை மேற்கொண்டார்.

அப்பரமதத்தரது இல்லறவாழ்க்கைக்கு அருமையான துணையாய் அமைந்த புனிதவதியாரும், பரமசிவனது அழகிய பாதங்களில் மிக்க பக்தியினல் உண்டாகிய ஆசையானது சிறிதும் ஒழிதலில்லாமல் மிகவும் ஓங்க, துறந்தவரை உபசரித்தல், தரித்திரர்களிடத்தில் அருளுடைமை, வாழ்க்கைக்குவேண்டும்பொருளை அறிந்து காப்பாற்றிவைத்தல், உணவுசமைத்தலில் வல்லமை முதலிய இல்லறத்திற்கு உரிய நற்குண நற்செய்கைகளெல்லாம் தவருமலிருக்கும்படி அகத்தில் பழகுவாராயினர். பரமசிவனது தொண்டர்கள்வந்தடைந்தால், சிறந்த அமுதம்போன்ற இனிய உணவை அளித்தும், செம்பொன்னும் நவரத்தினங்களும் நல்ல ஆடையும் முதலான பொருள்களில் தமது அன்பினல் அவ்வடியார்களுக்குத் தக்கபடி விருப்பமுற்றவைகளைக் கொடுத்தும், தேவாதிதேவனகிய பரமசிவனது திருவடிகளின்மீது பக்தி ஞானம் மேலிட இல்லறம் நடாத்தும் நாளில், தருமமார்க்கத்தில்

நடக்கிற பரமதத்தருக்கு ஒப்பற்ற இரண்டு மாம்பழங்களை அவரைக் காண வந்தடைந்தவர்கள் சிலர் கொடுத்தார்கள். அவர் அப்பொழுது அம்மாம்பழங்களை வாங்கிக்கொண்டு, அவர்கள் குறைப்பட்டு வேண்டும் பொருள்களைக் கொடுத்து, 'இக்கனிகளை நமது இல்லத்தில் உள்ள மனைவியின் கையிற் கொடுங்கள்' என்று கூறினர். "கற்புடுத்து அன்புமுடித்து நாண்மெய்ப்பூசி, நற்குண நற்செய்கை பூண்ட" வராகிய புனிதவதியார், பர்த்தாவாகிய பரமதத்தர் வரவிடுத்த இரண்டு பழங்களையும் கைக்கொண்டு வீட்டிற்குள் வைத்தனர்.

பின்பு, சிவபிரானது சிறந்த அடியாரொருவர் பசியால் உணவின்மீது மிகவும் அவாவுற்று அவ்வீட்டில் நுழைந்தார். புனிதவதியார், பரமசிவனது உண்மையடியாரது தன்மையை நோக்கி, சிவபிரானது திருத்தொண்டரைப் பசிதீர்ப்பேன் என்று அன்புபொருந்தி, திருவடிகளை விளக்க முதலில் நீரைக்கொடுத்து, பாத்திரத்தை வைத்து, குற்றமற்ற நல்ல விருந்தாக இனிமையான அன்னத்தை உண்பிப்பாராயினர். அப்பொழுது கறியமுது சமைக்கப்படாமையால் உதவாமல் திருவமுது மாத்திரமே உதவ, புனிதவதியார், சிவபிரானது திருத்தொண்டரே பெறு

தற்கு அரிய விருந்தினராய் வந்தடைந்தால் இதற்கு மேற்பட்ட பேறு வேறு இல்லையென்கிற அறிவை உடையவராய், அத்தொண்டர் திருவமுது செய்வதற்கு வியஞ்சனத்தை விரும்பித் தேடுவாராயினர். முன்னே கணவரால் வைக்கவென்று அனுப்பப்பட்டுத் தம்மிடத்திருந்த இனிய சுவையுள்ள மாம்பழங்களிரண்டில் ஒன்றை எடுத்துக்கொண்டு, அடியார்க்குத் திருப்தியுண்டாக்கப் பெறுவோமென்று கருதியதனால் மனமகிழ்ச்சிகொண்டு, மிகவும் விரைவாக வந்துசேர்ந்து, பரிகலத்திற் பரிமாறி, அல்லலை அகற்றுகிற அமலனது அடியவரைஅமுது செய்வித்தார். கிழப்பிராயத்தால் உண்டாகிய மிக்கதளர்ச்சியினாலும், உணவின்மீது முதிர்ந்து கிளம்பிய விருப்பமாகிய பசித்தீயினது கொடுமையினாலும் சோர்ந்துவந்த சிவனடியார், வாய்ப்பான இன்சுவையுள்ள அன்னத்தை மாங்கனியோடு இனிமைபாகத் திருவமுதுசெய்து, புனிதவதியாரது அன்பின் செய்கைக்கு உள்ளம் உவந்து எழுந்தருளினர்.

அவ்வடியார் சென்றபின்பு, அகத்துக்கு அதிபதியாகிய பரமதத்தர், நடுப்பகலில் தம் மனையை அடைந்து, நீராடியபின், விரும்பி அன்னத்தை அருந்துமாறு, கற்புடைய புனிதவதியாரும் அன்

போடு முறைப்படி உபசரித்து உண்பிப்பாராயி னர். இனிய அன்னத்தை இனிய கறியமுதுக ளுடன் முறைப்படி பரிமாறியபின்பு, பரமதத் தர் தம் அகத்தில் முன்னே வைப்பித்த நல்ல மதுரமாகிய மாங்கனிகளிரண்டில் இருந்த ஓர் பழத்தை, அத்தேவியாரும் கொண்டுவந்து பாத் திரத்திற் பரிமாறினர். மனைவியார் கலத்திற் படைத்த மிக்க மதுரமுள்ள அந்தப்பழத்தை உண்டு, அந்த இனியசுவையினல் திருப்தியடை யாமல், அப்பரமதத்தர், 'இன்னும் இப்படிப் பட்டதொரு பழம் இருக்கின்றதே; அதனை யுங் கொண்டுவந்து பரிமாறுக' என்று சொன் னர். அதுகேட்ட மனைவியார், அதைக்கொண்டு வந்து கொடுக்கப்போகிறவர்போல அவ்விடத்தி னின்று போனர்; போன அவ்விடத்தில் நின்று கொண்டு வருத்தப்படுகின்றவரானர். கிடைத் தற்கு அரிய மற்றொருபழத்துக்கு அங்கு அப் பொழுது என்னசெய்வார்? மெய்ம்மறந்தவராய், 'ஆபத்து நேரிட்டகாலத்தில் நினைத்தால் அப் போதே வந்து அநுக்கிரகஞ்செய்கின்றவரன்றோ பரமசிவன்?' என்று அவருடைய திருவடிகளைத் தம்முடைய மனத்திற் பொருந்தவைத்துத் தியா னஞ் செய்தார். உடனே அவரது திருவருளால், அப்புனிதவதியாரது கையினிடத்தில் முன்னைய வற்றினும் மிக்க மதுரமுடையதொரு மாம்பழம்

வந்திருந்தது. அப்பெண்மணி, அப்பழத்தை, பரமசிவனது திருவருளைக்குறித்து அகமிகவுருகி, உடனே கொண்டுவந்து மகிழ்ந்து பரிமாறலும், பரமதத்தர் அதனை உண்டு, அதிற்பொருந்திய சுவை தேவாமிருதத்தினும் சிறந்திருப்பதனால், 'இது முன்னே நான் கொடுத்தனுப்பிய மாம்பழமன்று: மூவுலகங்களிலும் பெறுதற்கு அரியது-; இதை நீ பெற்றது வேறெவ்விடத்தில்?' என்று மனைவியைக் கேட்டார். அவ்வார்த்தையைக் கேட்டதும், புனிதவதியார், சிவபிரான் அளித்தருளிய சிறந்த பேரருள் வெளிப்படுத்தப்படும் தகுதியதன்றென்று தாம் கருதியதனால் அதைச் சொல்லமாட்டாதவராகியும், பழகிய கற்பினுடைய வழியினால் கணவரது வார்த்தையைப் போற்றுதிருத்தல் மெய்வழியன்றென்று எண்ணியதனால் சொல்லாது மறைக்கவும் மாட்டாதவராகியும், 'இருதலைக்கொள்ளியின் இடையில் அகப்பட்ட எறும்பேபோல' வருந்தி நின்றார். சிறிதுபொழுது சிந்தித்து, இறுதியாக, செய்தபடி சொல்வதே கடமையென்று துணியும் சீலத்தை உடையவராய், பரமசிவனது திருவடிகளை மனத்தில் நன்குபதியும்படி வணங்கித் தியானம் செய்து, 'கிடைத்தற்கரிய இக்கனியை அளித்தவர் யார்?' என்று வினவும் கணவர்க்குப் புனிதவதியார் நிகழ்ந்த விதத்தைச் சொன்னார். பரம

சிவனது திருவருளாற் கிடைத்ததென்பதைக் கேட்ட பரமதத்தர், அதனை நம்பாதவராகி, மனைவியாரைநோக்கி, 'இது சிவபிரானது திருவருளாற் கிடைத்ததாயின், இன்னம் ஒரு குற்றமற்ற மாங்கனியை அவருடைய அருளால் அழைத்து அளிப்பாய்' என்று சொன்னார். மனைவியார் அவ்விடத்தைவிட்டுப் போய்ப் பரமசிவனைத் துதித்து, 'இப்பொழுது இதனைத் தந்தருளீராயின், அடியேனது உரை பொய்யாய் விடும்' என்று விண்ணப்பஞ்செய்தார். அப்பொழுது, சுவாமியினுடைய திருவருளாலே மற்றொரு மாம்பழம் அவர்கையில் வந்திருந்தது. அதை அப்பொழுதே புனிதவதியார் அப்பரமதத்தரது கையிற் கொடுக்க, அவர் அதிசயித்து வாங்கிக்கொண்டார். பின்பு, பரமதத்தர், தமது கையில் வந்திருந்த மாங்கனியைக் காணாதவராகி, மிக்க அச்சமேற்படுதலால், உள்ளமும் உடலும் தடுமாற்றங்கொண்டு, புனிதவதியாரை வேறோர் தெய்வமென்று கருதினர்.

பிறகு, பரமதத்தர் அவரைப்பிரியுந்துணிவை மேற்கொண்டு, தமது கருத்தை ஒருவர்க்கும் வெளிப்படுத்தாதவராய், மனைவியாரோடுசம்பந்தமில்லாமல் வாழுங்காலத்தில், புனிதவதியாரை விட்டுவிடுவதே எண்ணமாகக் கொண்டு, அதற்

குத் தகுந்த முயற்சியைச் செய்பவரானார். அதனால், பரமதத்தர், 'கடலின்மேற் செல்கின்ற மரக்கலத்தைக் கருவியாகக்கொண்டு போய், மிக்க திரவியத்தைத் தேடிக்கொண்டு வருவேன்' என்று சொல்ல, உறவினராகிய பல வணிகர்கள் ஓர் மரக்கலம் செய்வித்தார்கள். செய்வித்த மரக்கலத்தை ஓட்டுதல் முதலிய தொழிலுக்கு வேண்டிய மாலுமிகள் முதலியவர்களோடு தாம் செல்லநினைத்த த்வீபாந்தரங்களில் விரும்பப்படுகின்ற அரும்பண்டங்களும் தம்நாட்டில் எளிதிற் கிடைப்பனவற்றை மரக்கலத்தில் நிரம்ப ஏற்றி, க்ஷேமமாகப் போய்ச்சேரவேண்டுமென்று சமுத்திர ராஜனாகிய வருணபகவானைத் தொழுது கொண்டு, தலைவராகிய பரமதத்த வர்த்தகரும் ஓர் சுபதினத்திற் கப்பலேறி, கடலின்மேற் சென்றார்; கடலிற் கப்பலை நடத்தித் தாம்போக வேண்டுமென்று கருதிய தேசத்தில் உத்தேசித்தபடி கிரமமாக விரைவிற்போய்ச்சேர்ந்து, அங்கு, தாம் கொண்டுபோன சரக்குக்களைக் கொடுத்துத் தம் நாட்டில் அருமையாயிருக்கிற அளவில்லாத பல வளமுள்ள பண்டங்களைப்பெற்று, இடையிற் சிலநாள்கள் நீங்க, மீண்டும் அந்த மரக்கலத்தில் ஏறி, பாண்டிநாட்டில் ஒரு நகரத்தில் வந்து சேர்ந்தார்.

அந்நகரிற் குடியேறியவர், தாம்கொண்டுவந்த அளவில்லாத பல சரக்குக்களால் வர்த்தகஞ் செய்து சம்பாதித்த ஒப்பற்ற மிக்க திரவியத்தையெல்லாம் ஓரிடத்தில் வட்டியினுல் பெருகும்படி செய்துவைத்து, அவ்வூரார் விரும்பி மகிழ்ந்து புகழ, ஒரு வைசியன் பெற்ற அழகமைந்த ஒரு கன்னிகையைச் சிறப்புற மணஞ்செய்துகொண்டார்.

அங்ஙனம் கலியாணஞ் செய்துகொண்டு, முன்பு தாம் விவாகஞ்செய்துகொண்ட தெய்வப் பெண்மையான புனிதவதியாரிடத்தில் நடந்த இரகசியத்தை ஓரிடத்திலும் வெளிப்படுத்தாமல் அடக்கிய மனத்தோடு, இல்லற முறைமையில் தவறாமலிருந்து, அகமலர்ச்சியும் முகமலர்ச்சியும் பெற்றுவாழும் நாளில், பழைய அந்நகரிலிருக்கின்ற சிறந்த பிரபல வர்த்தகர்களோடு மிக்க நிதிகட்குத் தலைவனுகிய குபேரன்போலப்பெற்ற செல்வத்தாற் சிறப்புமிருந்து கடலிற் கப்பல்களை வியாபாரத்துக்குச் செலுத்துவதனுல் பிரக்கியாதிபெற்ற அப்பரமதத்தர், தமது இரண்டாம் மனைவியிடமாகப் பூங்கொடியையொத்த ஒரு பெண்குழந்தையை அருமையாகப் பெற்ருர். இவர் மகளைப் பெற்றபின், அதற்குச் செய்யவேண்டிய மங்களகரமான காரியத்தைச் செய்து, தாம் முன்பு கூடிவாழ்தற்கு அஞ்சி

விட்ட ஒப்பற்ற பெருமைபொருந்திய மனைவியாராகிய புனிதவதியாரைச் சம்பந்தமில்லாதிருக்கும்படி நினைத்து, எல்லாராலும் தொழப்படும் தெய்வகுலத்தில் வந்தவரென்று கருதி, நாமகரணஞ்செய்கின்றகாலத்தில் வேண்டிய கடமைகளைச் சிறப்புறச்செய்து, அவருடைய புனிதவதியாரென்கிற திருநாமத்தையே தாம் அன்புவைத்த அப்பெண் குழந்தைக்கு இட்டு, இந்நகரத்தில் இங்ஙனம் இல்லறவாழ்க்கை நிலைமையை அடைந்திருந்தார்.

இப்பால், காரைக்காலில்வாழ்கிற வணிகரான தமக்கு நிகரில்லாத செல்வத்தையுடைய தனதத்தனாது திருமகளாராகிய புனிதவதியாரும், உறுதியானகற்பொழுக்கத்துடன் இல்லறத்தை வழுவாது விரும்பி நடத்திக்கொண்டு வந்தார். மிக்க திரவியலாபத்தின்பொருட்டுக் கடலிற்கப்பலின்மேற் சென்ற பரமதத்தர் பாண்டியநாட்டில் ஒருபெரிய நகரத்திற்சேர்ந்து அளவில்லாதமிக்க செல்வத்தை விருத்திசெய்துகொண்டு இனிமையாக வாழ்கின்றாரென்ற புனிதவதியாருடைய சுற்றத்தார் கேள்விபுற்றார்கள். அந்தச்சொல்லைக் கேட்டவுடனே, புனிதவதியாருடைய உறவினரும், தமக்குற்ற உறவினர் சிலரைப் பரமதத்தரிடத்து அனுப்பி, அவரது நிலைமையைக் கேட்

டுணர்ந்து, மனத்திற் கவலைகொண்டவராகி, அவர் இருக்குமிடத்துக்குப் புனிதவதியாரைத் தாமே கொண்டுபோய் விடவேண்டுமென்று நிச்சயித்தார்கள்; உயர்ந்த நவரத்தினங்கள் பதித்த பல்லக்கில், அழகிய அன்னநடை யுடையவரும், சாயலில்மயில்போன்றவருமாகிய புனிதவதியாரை, ஒப்பற்ற திருமகள் என்று கண்டோர் சொல்லும்படி ஏற்றி, அழகிய வயல்களைத் தாண்டி, அன்புற்ற சுற்றத்தாரும் மாதர்கள் பலரும் சூழ்ந்துவர, நெடுந்தூரம் கடந்துசென்றார்கள்; இங்ஙனம் வழிப் பிரயாணத்தில் சிலநாள்கள் கழியப்போய், பாண்டிய நாட்டையடைந்து, பரமதத்தர் வாழ்ந்திருக்கின்ற பெரிய நகரத்திற்கருகில் வந்து, முதன் மனைவியாராகிய புனிதவதியாரை அழைத்துக் கொண்டுவந்து சேர்ந்த செய்தியை அவருடைய கணவராகிய பரமதத்தர்க்குச்சொல்லி முன்னே போகும்படி ஆள் அனுப்பினார்கள்.

புனிதவதியார் வந்தடைந்த செய்தியைக் கேட்டவுடனே, பரமதத்தரும் மனத்தில் அச்சங்கொண்டு, பின்பு மணம்புரிந்துகொண்ட இரண்டாம்மனைவியையும் அழைத்துக்கொண்டு, அவளிடம் பெற்ற பெண்குழந்தையோடும், விரைவிற் புனிதவதியாரிடத்தில் வந்தார். அவர்,

தாம் அந்த மனைவியோடும், தளர்ந்த நடையை யுடைய பெண்குழந்தையோடும் புனிதவதியா ருடைய பாதத்தில் விநயத்தோடுதாழ்ந்து, 'அடி யேன் உமது அருளால் வாழ்கின்றேன்; இந்த இளைய பெண்குழந்தைக்கும் பக்தியினால் உம் முடைய பெயரையே இட்டேன்' என்று சொல் லிக்கொண்டு விழுந்து ஸாஷ்டாங்கமாக நமஸ் கரித்தார். கணவர் தம்மை வணங்கக்கண்ட அழகிய பூங்கொடிபோன்ற புனிதவதியாரும், கூடவந்த சுற்றத்தார்களிடத்திலே அச்சத் தோடு ஒதுங்கி நிற்க, அதனைக் கண்டுணர்ந்த உறவினர் வெட்கிப் பரமதத்தரைப் பார்த்து, 'நீர் உம் மனைவியை வணங்குவதென்ன?' என்று கேட்டார்கள். அதற்கு அவர், அவர்களை நோக்கி, 'இவர் மானுடப் பெண்ணல்லர்; பெருஞ் சிறப்பமைந்த தெய்வப்பெண்ணாதலை நான் அறிந்துகொண்டு இவரைப் பிரிந்தபின், இரண்டாம் மனைவியிடத்திற் பெற்ற இந்தப் பெண்மகவிற்கு, இவரைத் தெய்வமாக நினைத்த தனால், இவரது பெயரையே சூட்டினேன்; ஆத லால், நீங்களும் இவரது பொற்பாதங்களைப் பணிந்து துதித்தலைச்செய்யுங்கள்' என்று உறுதி மொழியுரைத்தார். அப்போது, புனிதவதியார், 'இப்பொழுது இவர் குறித்தகொள்கை இதுவா யிருக்கின்றது; இனி, இவர்க்காகத் தாங்கிக்

கொண்டிருந்த அழகமைந்த தசைப்பொதியாகிய உடலை இங்கே கழித்து, அங்கே தேவரீரிடத்து நின்று தேவரீரது திருவடிகளைத் துதிக்கின்ற பேய்வடிவை அடியேனுக்கு அன்புறத் தந்தருளல் வேண்டும்' என்று பரமசிவனைத் துதித்து வேண்டிநின்றார்; அந்தக் கணத்திலேயே, கடவுளுடைய திருவருளினாலே, முத்தியைத் தரும் தத்துவ ஞானம் மிகுதியாகத் தோன்ற, தாம் விரும்பிய வரத்தை அடைவாராகி, தேகத்தில் அழகுதோன்ற இருந்த மாமிஸம் முழுதையும் உதறிவிட்டு, எலும்புடம்பேயாக, விண்ணுலகமும் மண்ணுலகமும் மற்றையெல்லாவுலகமும் வணங்குகின்ற பேய்வடிவமானார். அப்பொழுது, எங்கும் மலர்மழை பொழிந்தது; தேவதுந்துபிகளுடைய நாதம் உலகமெல்லாம் நிறைந்து விம்மிற்று; தேவரும் முனிவரும் கொண்டாடினார்கள்; பிரமதகணங்களெல்லாம் ஆவேசத்தாற் கைதட்டிக் கொக்கரித்துக் கூத்தாடின. முன்னே நின்று அதுகண்ட அளவில்லாத பல சுற்றத்தாரும், புனிதவதியாரைத் தொழுதுகொண்டு அஞ்சி நீங்கிப் போய்விட்டார்கள்.

புனிதவதியார் தமக்குச் சிவபெருமானுடைய திருவருளினாலே உண்டாகி வளர்ந்த தத்துவ

ஞானத்தினது சம்பந்தத்தால், ஒப்பற்ற ஒரு தன்மையையுடைய பரமசிவனைக்குறித்து அற்புதத் திருவந்தாதி என்னும் ஓர் பிரபந்தத்தைத் திருவாய்மலர்ந்தருள்பவராகி, 'அழகமைமந்த சிவந்த கடவுளுடைய திருவடித்தாமரைகளைத் துதிக்கின்ற நல்ல அடியார்கூட்டத்தில் நான்அடியேனுயினேன்' என்று விரும்பிப்பாடி, சிறுற்ற திருவிரட்டைமணிமாலையையும் * தொடங்கிப் பாடி, பரமஞானம் பொருந்தி மேன்மேலும் பெருக, திரிபுரமெரித்த விரிசடைப்பெரியோனுன பரமசிவன் எழுந்தருளியிருக்கிற வெள்ளிமயமான பெரிய திருக்கைலாசகிரிக்குப் போக விரும்பி, தமக்குவாய்த்த பெரிய திருவருள் தம் முன் மிகுதியாக நின்று துணைசெய்ய வழிநடக்கத் தொடங்கினுர்.

அவர்வடிவத்தைப் பார்த்தவர்கள் ஆச்சரியப்பட்டு அஞ்சி அப்பால்நீங்கி ஓடுவார்கள். புனிதவதியார், தாம் மேற்கொண்டதாகிய ஒரு வேஷத்தினது தன்மை இருக்கிறபடியைப் பிறர் சொல்லக் கேட்டு, 'இந்திரன்முதலிய தேவர்களுக்கு நல்லவராகிய பரமசிவனுர் என்னை

*இரட்டைமணிமாலை - ஓர்பிரபந்தம்; அது முறையானே கலித்துறையும் வெண்பாவுமாக இருபதுபாடல் அந்தாதித்தொடையால் வருவது.

அறிவாரானல், உண்மைத்தன்மை அறியாத எட்டுத்திக்கிலுமிருக்கும் மிருகங்கள்போன்ற ஜனங்களுக்கு நான் எந்தவுருவமாக இருந்தாலென்ன ?' என்று சொல்வாரானர். அவர் வட திசையிலுள்ள நாடுகளெல்லாம் மனோவேகத்திலும் மிகுந்த வேகத்தோடு நடந்துசென்று கடந்து, பரமசிவன் எழுந்தருளியுள்ள அந்த ஸ்ரீகைலாஸகிரியின் பக்கத்தை அடைந்து, அங்கு காலினல் நடத்தலைத் தகுதியன்றென்று ஒழிந்து. பூமியின்மேல் தலையால்நடந்துபோனர்.

அங்ஙனம் தலையினல் நடந்துசென்று, சங்கரமூர்த்தி எழுந்தருளியிருந்த கைலையங்கிரியின் மேல் மனமகிழ்ச்சியினலே அன்பு பொங்க ஏறும்போது, பரமசிவனது வாமபாகத்தில் எழுந்தருளியிருக்கின்ற பார்வதீதேவி திருக்கண்களால் அதைக் கண்டனள். அம்பிகையம்மை தம் திருவுள்ளத்தில் ஆச்சரியமடைந்தருளி, தமது காதலானரை நோக்கி வணங்கிநின்று, 'எம்பெருமானே ! இங்கே தலையினல் நடந்து ஏறி வருகிற எலும்புடம்பையுடையவரது அன்பின் மகிமை இருந்தபடி என்னே !" என்று விண்ணப்பஞ்செய்ய, அப்பொழுது பார்வதீதேவியார்க்குப் பரமசிவன் திருவாய்மலர்ந்து அருளிச்செய்வாரானர்: 'உமையே! இங்கே வருகின்ற இவள்

நம்மைத் துதிக்கின்ற அம்மையென்று அறி. இவள் இந்தப் பெருமைபொருந்திய வடிவத்தை யும் நம்மை வேண்டிப் பெற்றனள்' என்று, பின்பு, புனிதவதியார் அருகில் வந்தடைய, அவரை அருளுற நோக்கி, உலகமெல்லாம் உய் யும்பொருட்டு, 'அம்மையே!' என்கிற செம்மை யாகிய ஒரு திருமொழியை அருளிச்செய்து அழைத்தருளினர். இறைவன் "அம்மையே யென்றழைத்தருள, புனிதவதியார் அதுகேட் டுப் பரமசிவனை 'அப்பா!' என்று சொல்லிக் கொண்டு, திருவடிகளில் தண்டம்போல் விழுந்து நமஸ்கரித்தார்.

அங்ஙனம் வணங்கி யெழுந்த புனிதவதியா ரைப் பரமசிவனும் அருளினல் நேராகப் பார்த்து, 'நம்மிடத்தில் இங்கு இப்பொழுது வேண்டும் வரம் யாது?' என்றுவினவியருளினர். அதற்குப் புனிதவதியார் வணங்கிநின்று சொல் லத்தொடங்கினர்: அழியாத பேரின்பமய மாகிய அன்பை விரும்பி வேண்டி, பின்னும் வேண்டுகின்றவர், 'இனிப் பிறவாமைவேண்டும்; மீண்டும் பிறப்புண்டாயினும், தேவரீரை எக்கா லத்தும் மறவாமைவேண்டும்; இன்னும், தரும மூர்த்தியே! தேவரீர் திருநடனஞ்செய்தருளும் போது, தேவரீருடைய திருவடியின்கீழ் அடி

யேன் சிவாநந்தத்தைபுடையேனுகித் தேவரீ ரைப் பாடிக்கொண்டிருத்தல்வேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்தார்.

தம்மைத் துதிக்கும் அடியார்க்கு ஆச்சிரய மாய் நிற்கும் பரமசிவன், புனிதவதியார்க்கு அவை பொருந்தும்படி அருள்புரிந்து, 'தென் றிசையில் நாம் நின்று நீடுழி வாழ்கின்ற வயல் சூழ்ந்த பழைய ஸ்தலமாய் விளங்காநின்ற திரு வாலங்காட்டில் நாம் ஆடுகின்ற திருநடநத்தை யும் நீ தர்சித்துப் பேராநந்தத்தையுற்று, எப் போதும் நம்மைப் பாடிக்கொண்டிரு' என்று அருளிச்செய்தார். அவ்வாறு ஸ்வாமியினுல் அருள்செய்யப்பெற்ற புனிதவதியம்மையும், செம்மையாகிய வேதத்தின் மெய்ப்பொருளான சிவபிரானை வணங்கி விடைபெற்றுக்கொண்டு சென்று, சொல்லுதற்குஅரிய பெருமைபொருந் திய அன்பினுல், திருவாலங்காடென்னும் அத் திருப்பதியைத் தலையினுல் நடந்துசென்று சேர்ந் தார்; அத்திருவாலங்காட்டில் அண்டத்தை அளாவும்படி உயர்ந்து சிவபிரான் திருநடன மாடுகின்ற திருக்கோலத்தைக் கண்டபொழுது, "கொங்கை திரங்கி" என்று அடிதொடங்கி, மூத்த திருப்பதிகத்தை ஈச்வரரைக்குறித்துப் பாடி, திருநடனத்தைத் துதித்து இருக்குங்கால்,

பரமசிவனாரது திருக்கூத்தை முன்னே நின்று வணங்குகின்ற அன்புமிக்க பேராவாவானது மனத்தில் எழுந்து மேன்மேலும் ஓங்க அதிசயமடைந்து, "எட்டியிலவம்மீகை" என்று அடி தொடங்கி, "கோட்ட முழவங், குழகனுடும்" என்று திருப்பதிகம் பாடினார்.

ஆதியும் அந்தமும் இல்லாத • பரமசிவனார் அம்மையேயென்று இனிய திருவாக்குக் கொடுத்து அருள்செய்யப்பெற்றவரும், அவர் அருளால் விளங்குகின்ற திருநடனஞ்செய்கின்ற சமயத்தில் முன்னேநின்று இசைபாடுகின்றவரும், திருத்தாண்டவத்தில் அச்சுவாமியினுடைய தூக்கியருளுந் திருவடியின்கீழ் எக்காலத்தும் சிவாநந்தத்தை அநுபவித்துக் கொண்டிருப்பவருமாகிய புனிதவதியாரைப் பொருந்திய மிக்க புகழைத் துதித்தல் எவரறிவிற்கு அளவாவது?

முற்றிற்று.



# ஜனோபகாரி.

பொதுஜனங்களுக்குள் அறிவைப் பரவச்செய்து அவர்களின் முற்னேற்றத்திற்கென்றே உழைத்து வரும் ஓர் சிறந்த தமிழ் மாதாந்தப் பத்ரிகை.

இப்பத்ரிகையில் வெளியாகும் பலவிஷயங்களும் சிறந்த கற்றறிந்தவர்களால் எழுதப்பட்டுவருகின்றன. நடை மிகுதெளிவானது. சிறுவர் சிறுமியர் முதலிய யாவரும் சுலபமாய்ப் படிக்கக்கூடியது. காலதாமதமின்றி ஒவ்வொருமாதத்துபபத்ரிகையும் ஒரு குறிப்பிட்ட தேதியில் வெளியிடப்படுகின்றது. எவரும் வாங்கி நன்மையடையும்பொருட்டு இதன்சந்தா மிகவும் குறைக்கப்பட்டிருக்கிறது

## இப்பத்ரிகையில் வெளியாகும் விஷயங்கள்.

(வ்யாஸங்கள்.)

1. கல்வியபிவ்ருத்திக்குரிய பல விஷயங்கள்.
2. இந்திய வியவஸாயத்தைப்பற்றிய பல விஷயங்கள்.
3. கைத்தொழில்.
4. வியாபாரம்.
5. கூட்டுறவு.
6. ஜனஸமூஹத்தின் அபிவ்ருத்திக்குரிய பல விஷயங்கள்.
7. சிறந்த நீதிகளைப் போதிக்கக்கூடிய நாவல்கள், நாடகங்கள்.
8. மாணவர்களுக்கு உபயோகமான வ்யாஸங்கள்.
9. நம் தேசத்தின் முன்னேற்றத்திற்காகப் பாடு பட்ட மகான்களின் ஜீவ்யசரித்ரங்கள்.
10. ஸ்த்ரீகளுக்கு உபயோகமான பல நற்போதங்கள்.

(குறிப்புக்கள்.)

வித்யாவிஷயம், வியவஸாயம், கைத்தொழில், வியாபாரம், கூட்டுறவு, ஸுகாதாரம் வைத்யம், ஸ்த்ரீகளுக்கும் சிறுவர்களுக்குமான விஷயங்கள், வேடிக்கைகள் ஆகிய இவைகளைப்பற்றிய பல முக்யக்குறிப்புக்கள் ஒவ்வொருமாஸமும் சேர்க்கப்படும்.

தபாற்கூலிஉள்பட சந்தாவிவரம்.

இந்தியா, பர்மா, சிலோன்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஒருவர்ஷத்திற்கு | | ... | ரூபா. | 3 | 0 | 0 |
| தனி ப்ரதி | ... | ... | ,, | 0 | 5 | 0 |
| மாதிரி காபி | ... | ... | ,, | 0 | 1 | 0 |

பினங்கு, சிங்கப்பூர், நேட்டால் முதலிய இடங்களுக்கு.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஒருவர்ஷத்திற்கு | | ... | ,, | 4 | 8 | 0 |
| தனி ப்ரதி | ... | ... | ,, | 0 | 6 | 0 |
| மாதிரி காபி | ... | ... | ,, | 0 | 2 | 0 |

சந்தாத்தொகை முன்பணமாகத்தான் அனுப்பவேண்டும். அல்லது, முதல்ஸஞ்சிகையை ஒருவர்ஷத்திக்கு அல்லது ஆறுமாஸத்துச்சந்தாவுக்கு வி. பி. மூலமாய்ப் பெற்றுக்கொள்ளலாம்.

எம்மால் பதிக்கப்படும் புஸ்தகங்கள் இப்பத்ரிகையின் சந்தாதார்களுக்குமாத்ரந்தான் குறைந்த விலைக்குக் கொடுக்கப்படும்.

# ஜனோபகாரி.

பொதுஜனங்களுக்குள் அறிவைப் பரவச்செய்து அவர்களின் முற்னேற்றத்திற்கென்றே உழைத்து வரும் ஓர் சிறந்த தமிழ் மாதாந்தப் பத்திரிகை.

## இப்பத்திரிகையில் வெளியாகும் விஷயங்கள்.

வியாஸங்கள்.—1. கல்வியபிவிருத்திக்குரிய பலவிஷயங்கள், 2. இந்திய வியவசாயத்தைப்பற்றிய பலவிஷயங்கள். 3. கைத்தொழில், 4. வியாபாரம், 5. கூட்டுறவு, 6. ஜனஸமூஹத்தின் அபிவிருத்திக்குரிய பல விஷயங்கள். 7. சிறந்த நீதிகளைப் போதிக்கக்கூடிய நாவல்கள், நாடகங்கள், 8. மாணவர்களுக்கு உபயோகமான வியாஸங்கள், 9. நம் தேசத்தின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்ட மகான்களின் ஜீவியசரித்திரங்கள், 10. ஸ்திரீகளுக்கு உபயோகமான பல நற்போதங்கள்.

குறிப்புக்கள்.—வித்யாவிஷயம், வியவசாயம், கைத்தொழில், வியாபாரம், கூட்டுறவு, சுகாதாரம், வைத்யம், ஸ்திரீகளுக்கும் சிறுவர்களுக்குமான விஷயங்கள், வேடிக்கைகள் ஆகிய இவைகளைப்பற்றிய பல முக்கியக் குறிப்புக்கள் ஒவ்வொருமாதமும் சேர்க்கப்படும்.

### தபாற்கூலி உள்பட சந்தாவிவரம்:—

| | | உள்நாடு. | | | வெளிநாடு. | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஒருவருஷத்திற்கு | ரூபா. | 3 | 0 | 0 | 4 | 8 | 0 |
| தனிப் பிரதி ... | ,, | 0 | 5 | 0 | 0 | 6 | 0 |
| மாதிரி காபி | ,, | 0 | 1 | 0 | 0 | 2 | 0 |

எம்மால் பதிப்பிக்கப்படும் புஸ்தகங்கள் இப்பத்திரிகையின் சந்தாதார்களுக்குமாத்திரந்தான் குறைந்த விலைக்கும் கொடுக்கப்படும்.

மானேஜர், ஜனோபகாரி ஆபீஸ், வேலூர்.